ஹாமீம்.

பிஸ்மில்லாஹிர் றகுமானிர் றஹீம்

தற்கலை,

மெய்ஞ்ஞான சொரூபராகிய

காமில் முஹம்மல் ஆஷிகு ஆரிபுபில்லாஹ்

**பீர்முஹம்மது சாஹிபொலியுல்லாஹ்**

அவர்கள் திருவாய்மலர்ந்தருளிய

# மெஞ்ஞான அமிர்தகலை

## மிகுராசுவளம்.

ஷை. சாஹிபு அவர்கள் பேரில் மௌலூத்துசரிபு

காரண சரித்திரம்.

றகுமான்பேரில் முனாஜாத்து இந்நான்கும் அடங்கியது.

இஃது, கடையநல்லூர் பெரியதெரு,

மு. அ. ஹாபில் ஷெய்கு உதுமான் லெப்பை ஆலிம் சாயபு

அவர்களாலும்,

திருவிதாங்கூர் ஜில்லா, தற்கலை,

மீ. க. முஹம்மது மைதீன் ஆலிம் சாயபு அவர்களாலும்,

தென்காசி, மரைக்கார் பள்ளிவாசல் தெரு,

முஹம்மது அப்துல்காதர் ஆலிம்சாயபு அவர்களாலும்,

கடையநல்லூர் டவுண், பேட்டை,

அ. ம. அப்துறகுமான் கலிபா சாயபு அவர்களாலும்,

கடையநல்லூர் டவுண், பெரியதெரு,

ம. உதுமான் சோதிட வித்துவானூர், அவர்களாலும்,

சிவகிரியாசகர்,

இ. முகைய்யதீன் பிச்சை சாயபு புலவரவர்களாலும்

பார்வையிடப்பட்டு

கடையநல்லூர் டவுண் பேட்டை, புதுமனைத்தெரு

ந. சை. இஸ்மாயில் அரபி சாயபு அவர்கள்

சொந்த முயற்சியின்பேரிலும், பொருளுதவியின் பேரிலும்

தென்காசி, ஸ்ரீ மீனாக்ஷி பிரஸில்,

பதிப்பிக்கப்பெற்றது,

ஹிஜ்ரி 1348-ஹு ரபியுல் அவ்வல் மீ

Registered Copy Right] 1929 [இதன் விலை அணா 8

20 DEC 1929 MADRAS

B A




ஹாமீம்

பிஸ்மில்லாஹிர் றஹ்மானிர் றஹீம்

# அறிக்கை

# பொழிப்புரை முகவுரை வரலாறு

அகவல்.

சோதியா யெவர்க்குஞ் சுருதியில் மோட்சந்தரும்
பாதிரு மெஞ்ஞான அமிர்தகலை மிகுராசுவளமும்
நீதியா றகுமான்முனாஜாத்தும்நேர்த்தியுள்ளமத்ஹூமவுலூத்தும்
ஆதி நாயகனை யனுதினக் தொழுவாய் மெய்யே

எல்லா உலகங்களையுமுயிர்களையும் படைத்தாளுகின்ற வல்ல நாயகனான அல்லாகுத்த ஆலாவின் கிருபைத்தோழராகிய முஹம்மது நபி சல்லல்லாகு அலைகிவ சல்லம் அவர்களின் ஷபாஅத்துக் குரியமுஃமினீமான நமதுடற்பிறந்தான்மார்கள் யாவருக்குமாகியஷரிஹத்து, தரீக்கத்து, ஹக்கீக்கத்து, மஹ்ரிபத்து, மஹப்பத்து என்ற ஐந்தில் எழிதில் மோட்சத்தைத்தருகின்ற மெஞ்ஞான அமிர்தகலை, மிகுராசுவளமென்னும் பாடலை மலையாள மண்டலத்தைச்சார்ந்த தற்கலையில் வாழும் மெஞ்ஞான சொரூபராகிய பீருமுஹம்மது சாயபு என்பவர்கள் விருத்தமாகவும், கண்ணிகள் ஆகவும், கலித்துறையாகவும் திருவாய்மலர்ந்தருளியதை எங்கள் முன்னோர்கள் தமிழில் எழுதிவைத்திருந்தனர். எழிதில் ஹக்கீதா முறைவழியறியவேண்டுமாகையால் ஒழுங்குற அச்சிலிட்டுத்தர வேண்டுமென்று சிலர் விருப்பங்கொண்டமையாற் சில நண்பர்களைக்கொண்டும் சில சில பளமையாகிய ஏட்டுப்பிரதிகளைக் கொண்டும், சில ஹக்கீதா ஞானவான்களைக்கொண்டும் அறபாகிய மொழிகளுக்காக வேண்டிக் கனம்பொருந்திய வுலமாக்களைக் கொண்டும் பரிசோதித்துப்பார்வையிட்டுக் கடையநல்லூர் டவுன் பேட்டை புதுமனைத்தெரு ந. சை. இஸ்மாயில் அரபிசாஹிபு சொந்த முயற்சியின்பேரிலும் பொருளுதவியாலும் அச்சிற்பதிப்பிக்கப்பட்டது,

அல்லாகுத்த ஆலாவினுதவியால் ஷெடியாராலும் தற்கலை, பள்ளிவாசல்தெரு மீ. க. முகையதீன் பிள்ளை அவர்களாலும் ஷெடியூர் ஷெடி தெரு ம. அசனாரவர்களும் முக்கியமான அன்பராலும் நன்குணர்ந்து வழுவறக்கேட்டுக்கொண்ட முன்னிலையில் இப்பாடலும் திருநெறிநீதமும் நிறைவேறிற்று.

இதில் யாவருக்கும் விளங்கும்பொருட்டு அறபாகிய ஓசை பலுகாத வெழுத்திற்குச்சரியாக சிலவிடங்களிற் கிரந்தவெழுத்தமைத்துஞ் சில விடங்களிற் றமிழெழுத்தை யிரட்டித்துஞ் சில வெழுத்துக்களை யொற்றாக்கியுந் தொடர்பாகிய வெழுத்துகளைப் பிரித்து மமைத்ததாகையாலும் அன்றியும் மெஞ்ஞானிகளின் வாக்கியங்களி லிலக்கண விலக்கியங்க ளெதுகை மோனை பிறழ்ந்து வருகினும் ஞான கோட்பாட்டின் முறையே அவ்வாக்கியங்களை இலக்கணக் கோட்பாட்டாற் குற்றமென்று கொள்ளலாகாதென்று பழமொழிகண்டமையால் இங்ஙனமின்னூலில்சொன்னமெஞ்ஞான வாசியர் இலக்கண விலக்கிய வெதுகைக்கோட்பாடே தொடராக்கியும் இந்நூலிற் சில சில விடங்களிற் குறில் நீண்டும் நெடில் குறுகியும் இருப்பினும் அவ்வேற்று பிறழ்ந்து குறிலாகியும் நெடிலாகியும் இன்னுமிப்புத்தகங்களைக் காணிக்கை வைத்துக்கையாட்சி கொள்பவர்கள் படிக்கும்போது குறில் கூடினுங் குறையினும், நெடில் கூடினுங் குறையினும் அதன் தன்மை கண்டு இராகப்பரீக்ஷையையுயர்த்தியும் தனித்தும்படித்துக்கொள்ளலுமாம் அவர்களை யாம் விரும்புகின்றனம். இவற்றை நன்குணர்ந்துகொள்க அரபித்தமிழில் பைத்துகள் தமிழிலிருப்பதால் அரபி தெரிந்தவர்ளைக்கொண்டு ஹருபுகள் தெளிவாய் விளங்கும்படி வாசிக்க விரும்புகின்றனம்.

இங்ஙனம்

ந. சை. இஸ்மாயில் அரபி சாய்பு



C B

சிவகிரிமாநகரத்தில் வசிக்கும், கடையநல்லூர்,

## முஹையதீன்பேக் சாய்பு புலவரவர்களியற்றிய

# சாற்றுக்கவி.

---

இரட்டையாசிரிய விருத்தம்.

தீனவர் குலத்தில் விற்பன விவேகன்
தேர்ச்சியில் சிதரா சிந்தையாளன்
செந்தமி ழிலக்கண மிலக்கிய முணர்ந்துநற்
சீராமுத லாயுள்ள பேரின்பகவி பிரசங்கிப்போன்
பாண்டி நகர்தென்காசித் தாலுகா வூரடுத்த
பதிகடைய நல்லூர் பேட்டையூரான்
எண்டிசையுங் காண்பதற்கு கேட்பதற் கரிதான
மெஞ்ஞான அமிர்தகலைமிகுருசுவளமோலைச்சுவடிதன்னை
கனபாடு பட்டுளன்று மொழிப்பெயர்த்த
கவிராஜமுஹையதீன் பேக்கென்போனுரைத்தேன்
இன்னிலத்தில் மலையநகர் தற்கலைப்பதிதனிற்றங்கியுரைக்கின்ற
நாதர் வாவர்ஞ்சிபோர் சிறுமலுக்க ரீன்ற செல்வர்
தீன் னிலைதனையறிய வுரைத்தார் பீர்முஹம்மது நாதரமிர்தம்
சீர்பெருககடையநல்லூர்பேட்டை வாழும் இஸ்மாயில்
இன்பமுட னச்சிலிட் டுலகில் யாருமின்பமுடன்
நல்வழியிற் கருத ஆமீன் ஆமீன்

---

ஷை தற்கலை மெஞ்ஞானப்பிரபுவாகிய குதுபுல்ஸமான் ஹலரத்து பீர்முஹம்மது சாஹிபு ஒலியுல்லா அவர்கள் அருளிச்செய்த திருநெறி நீதம் படலம் நான்கும் அச்சிலிட்டுத்தயாராயிருக்கின்றது. தேவையான கனவான்கள் காலதாமதஞ்செய்யாது உடனே ஆடர் எழுதவேண்டியது. கொஞ்சகாப்பிகளே அச்சிடப்பட்டிருக்கின்றது. ஆர்ட்டு பேப்பர் புல்கலிக்கோ பைண்டு நான்கு படலங்களும் சேர்ந்தது விலை ரூபா 4—0—0 மறுபதிப்பில் மூலமும் உரையும் சேர்ந்து அரபுத்தமிழிலும் சுத்த தமிழிலும் வெளிப்படுத்தப்படும்.

இன்னும் ஞானமீசாக்குமாலை 1500 பாட்டுகள் எம்பாலிருக்கிறது. கூடிய சீக்கிரம் வெளிவரும். ஆமீன் ஆமீன்.

# ரிஜிஸ்டர் அறிக்கை.

---

இதனால் யாவருக்குந் தெரிவிப்பது யாதெனில், தற்கலே, பீர்முஹம்மது சாய்பு அவர்கள் பாடிய மெஞ்ஞான அமிர்தகலே, மிகுராசுவளம், றகுமான் முனஜாத்து, மத்ஹு மவுலீத் ஷரிபு காரணச்சரித்திரம் இவைகளடங்கிய நூலே யாம் அச்சிட்டு சென்னே யிலும் புதுவையிலும் ரிஜிஸ்டர் செய்திருக்கிறேம். இதனே எம் முடைய அனுமதியின்றி எவரேனும் அச்சிடுவரேல் அந்தந்த கவர் மெண்டு கட்டளேப்படி நேரிடும் நஷ்டத்திற்கும் கிரிமினல் குற்றத் திற்கும் உத்திரவாதியாகவேண்டுமென்பதேயாம். அச்சிட்ட இப் புத்தகங்களிலெல்லாம் எம்முடைய கையொப்பமிட்டிருப்பதால் அப்படி யில்லாத புஸ்தகங்களே வைத்து விற்கிறவர்களேக்கண்டு எமக்கறிவிக்கும் நண்பர்களுக்கு ஏம்மாலியன்ற இனுமளிக்கப்படும்

இங்ஙனம்

ந. சை. இஸ்மாயில் அரபி சாய்பு

## புஸ்தகம் கிடைக்குமிடம்,

1 ந. சை. இஸ்மாயில் அரபி சாய்பு அவர்களிடம்
பேட்டை டவுன் புதுமனேத்தெரு.
கடையநல்லூர் போஸ்டு;

2 மீ. க. முஹையதீன் பிள்ளே யவர்கள்
பள்ளிவாசல் தெரு, தற்கலே போஸ்டு,
திருவிதாங்கூர் ஜில்லா

3 மீ. க. முஹைதீன் பிள்ளே அவர்கள்
ஜெனரல் மெர்ச்சண்டு,
63
புது நிர். 284. பிரேசர்வீதி, இரங்கோன்,

மற்றும் புஸ்தகஷாப்புகளிலும் கிடைக்கும்.

கிளேஸ் காகிதம் மார்பில் கலிகோ பைண்டு புத்தகம் 1-க்கு அணு8

நேரிலும் வி. பி. மூலமாயும் பெற்றுக்கொள்ளலாம்.




தற்கலை,

## பீர்முஹம்மது சாய்பொலியுல்லா

அவர்கள் திருவாய்மலர்ந்தருளிய

# மெஞ்ஞான அமிர்தகலை.

(எண்சீர்கழி நெடிலாசிரிய விருத்தம்)

கண்டிடுவ தற்குமுன் யென்மண்டலம் நிறைந்தபொருள்
காபுனா ஞனமணியே
சென்றுபல கோலமை தாய்நின் றிலங்குதே
யெனமான சாவல்போல் கூவுமறையாம்
விண்டுதெரி சித்திடநான் பண்டொழிவ தானதே
வீசுமடா வாசி வழியில்
உண்டுபதி பூரணம தானவர்கள் காயமதில்
ஒன்றுபடு மென்று மனமே 1

ஒன்று படுமென்று ஓதினது ஆரெனவே
ஓசையறிய வொன்ற னுடலில்
அன்றுமகு மூதாகபி அந்தரம தானபொருள்
ஹக்கனில் மூழ்கி வரவே
ஒன்றுமறி யாதமனம் விண்டுகளி மாவுரை
உண்டுபசி யாரும் உணர்வில்
என்றுமகு மூதரெனும் விண்டுதெரி சித்திட
யேகனவ னாகு மெனமே 2

2 பீர்முஹம்மது சாய்பு அவர்கள் பாடிய

(வேறு)

எனமான கலிமாவின் இருநாசி வழியூடே
இயல்பாக மறையோதுமே
மனதான பலசிவன் அனரூதக மானதும்
மறைவாக மறையோதுமே
தனதாக நின்றதே அறியா திருப்பதோ
தனித்தனி வாழு மணியாம்
ஒனத்தேக மானதுள் ளேனத்தெங்கு மோதுமே
எனமெங்கும் நெமையுள்ளதே 3

நெமையுள் ளிருப்பதோர் நினைவா யிருப்பதும்
நெறியாகும் நெறி யாகுமே
அமையென்று மந்திரங்கள் கல்பில் ஹூவென்று
அறிவாளர்கள் அறிவார்களே
சமைகின்ற லோகமும் சகலகல ஞானமும்
தனித்தனி வாழுமணியாம்
உமையென்று நம்பினேன் வேறென்று மில்லையே
ஒருகாதல் பெருகாதலே 4

ஒருகாதல் பெருகாத லுனதாசை மனமீதி
லுரைவாடு முரவானதால்
மருமா மறையிலு மருஹூபி லாமிலு
மருவான மகரநேரமதால்
கருவான லாமிலும் கலிமாவி லாமிலும்
கருவான தருவானதால்
பருலான தாமடா யெனமெங்கு மொன்றல்லோ
பரலோக வெளியானதே 5

வெளியான வேதமும் விரைவாய் நூஹத்தை
விரைப்போர்கள் விரைப்போர்களே
வெளியான கோணமில் மிகக்கூர்மை பாருநீ
விளையாடு விளைவாகவே
சுளியான வட்டமில் சுடராகி நின்றுலாவுதே
சூட்சமிது மீட்சி தருமீன்
கனிவாசம் விசுதே இரசூல் முஹம்மதே
ஹக்கறிவு தெனக்கறிவதே 6

எனக்கறிவதா மறை நிகழ்த்தினது நீயெனவே
போதமறியாதபயல் நான்
பொய்க்கரிவ தாகவே பிலத்தினது நீயெனவே
போதமறியாத பயல்நான்
யெனக்கறிய தாமுறை வேதமுறை வேதமுறை
யானதொழில் வேணும் வேணும்
வெற்றிநபி யுள்ள ஹக்கறிவதாகவே
இல்மு பதினாலையும் கட்டினதும் நாமறியவே 7

நாமறிய நாலுமுறை நாதமணி யானதையும்
நாடினவர் தானறிவதாம்
ஓமறைவ தாகவே இல்முபதி னாலையும்
ஓதுமறை தான ஜிபுரிலாம்
ஆமறிவ தாகவே நாவுகொடு பேசிகின்ற
ஆலநவு தானநினை யுள்ளவே
நாமனம தாகுமே கேளுமித் தரணியில்
நாலுமறை யெல்லாமறியவே 8

இதுநாலு மறைவேதம் வெளியான தென்று
இரசூல் நினைத்தபடியால்
உதுமானு ரிடத்தில்வெகு மஹா ஸூனுபு
வென்றுரைத்தார் அகத்துமுறையால்
மதுவாசம் வீசுதே இரசூல் முஹம்மதே
மகுபூலு வென்று பலகை
அதுபோல கோர்வைசெய் யென்றிர சூலுரைத்த
ஆதமி யெல்லாமறியலாம் 9

எல்லாமறிந்தவே யென்னுள் நிறைந்தவனும்
இனமுண்டு வடிவில்லையாம்
அவனல்லாது வேறில்லையென்று மனதாசை
கொண்டாடாதே நீ சுகுதுசெய்
எல்லா மிதாவெனவே சொல்லால் அதைச்சொல்லிவிடு
எண்ணாத எண்ணமில்லையே
அல்லாதாம் சொன்னபடி ஆமென்றார் ஆலநபி
அறிவாளர் செய்யுமுறையே 10

முறையால் நடத்தினல் முளிப்பா யிருந்ததினல்
முன்னறிவே பின்னறிவது
பெரியோர்க ளொலிமார்க ளாகிலு
மனத்திண்ண மெந்தவிதம்
தறையென்ற பூலோக மிகவாழ்வு செல்வமதுந்
தானன சொர்க்கபதி தேடுமோ
கரையென்ற பலநோய்கள் மிடமிடுமை நாதமது
காணுதே காணுதாரே 11
காணுத சொர்க்கபதி கூறுணி மார்களையும்
காண்பது மெந்தவிதமோ
பேணுத யெண்ணமாய் நரகபதி யென்றென்னை
பேசுவது எந்தவிதமோ
உண்ணுத வூனுண்டு கற்றோர்களாகிலும்
உயிர்போனல் மீண்டுவருமோ
காணுத காட்சிதான் கண்டேன் நானென்றுநீ
ஹக்கறிவு நீபேசுருய் 12

(கலி விருத்தம்)

பேசுஞான வாருகெழன
பேதவித்த மாந்தரே
வாசி வாசி யென்றுசொல்லி
வம்பல்லோ வருந்துரீர்
வேசிபோல நின்றுவோசை
சிமிளுள்ளே இலங்குதே
காசிமுஸ்த பாநபிதான்
கண்டுமுன் னறிந்தேநான் 13

(சந்த விருத்தம்)

முன்தறித்த வகையான விந்துவழி
முடிநின்ற மணியோசையுள்
இன்னதென்று மணிபேசு கின்ற வகையென
இராப்பக லறிந்ததில்லை
பின்னதென்று எழுகோணமெனக்கு
பேசுகின்ற மணியோசையாம்
மன்னனென்று நபிசொன்ன தற்கல்லவோ
முஹம்மதென் றவர்களை வாழ்த்தினன் 14

( சந்தம் வேறு )

வாழ்த்து மஞ்சு வாறுகளென
வாய்விடாத மந்திரம்
பாத்திகா வென்ற சூரத்தை
பார்த்திருக்க லாகுமே
யேத்தி மூலமந்திரத்தை
எண்ணியெண்ணி யேங்கினல்
ஆத்துமா நிறைந்த மெய்யை
ஆண்டுக்கொள்ள லாகுமே 15

ஆண்டுகொண்டிருந்த மெய்யை
யப்புரத்தி லாக்கினல்
மாண்டசிவன் மீண்டுவந்து
மானிடவ ராவரோ
நாண்ட பூலோகத்திலே
நரகம் சொர்க்கம் நம்முள்ளே
என்று நாயன் சொன்னனென்று
என முஹம்ம தோதினர் 16

(வேறு)

என முஹம்ம தானது
இனங்களில் நிறைந்ததால்
மனமுஹம்ம தானது
மணிக்குள்ளே நிரைந்ததும்
மன முஹம்மதானது
முகத்திலே தாத்ததால்
எனமுஹம்ம தானதெங்கும்
நீயறிந்த வேதமே 17

(வேறு)

வேதமான தென்னது யென்னசொல்
வேந்தான தென்னது என்னசொல்
ஆதமான தென்னது என்னசொல்
ஆலமீதில் வாழ்வதே நீ சொல்லே 18

(வேறு)

சொல்லும் வேத சுருதியும் நம்முள்ளே
சுபங்களான சுவர்க்கமும் நம்முள்ளே
புல்லு வூள்வினை பூலோகமும்
கல்லும் வாதி யடங்கலும் ஹக்காமே 19

அடங்கலாய் அமைத்துருவாக முன்
பிடங்கள் தோறும் இதைப்போல சூரத்தாம்
திடங்களான தெருசினை தீதாறுதான்
தடங்கலில்லை தனக்குயிர் தம்பிரான் 20

தம்பிரானென்ற தன்மையை நீகேளென
என்பிரான் எங்கள் உள்ளிலே
உம்பிரா னெங்கள் வோடி யுகந்தபின்
முன்பிரான் வந்து முன்னிற்ப தூண்டுமே 21

உண்டுமென்று நீ உன்மனது நீயே
கண்டல்லோ மனக்காட்சியைக் காண்பது
உண்டுபணி ரெண்டும் நீ கோர்வை செய்ததை
அன்றுநாயன் இரக்கினன் யென்னதோ 22

இறக்கும் வேதம் இரசூலறிர்தல்லோ
புறைக்கினர் நபி கோர்வையதாமணி
சிறக்கும்வேத சிறப்பென நிகழ்ந்தவர்
பறக்கும் ஞான பலிகத்தி லாகுவார் 23

(சந்தக் கலிவிருத்தம்)

ஆக்குவா ரவரான ஜனுவிலே
போக்குவார் நிசம்பொய் குலையானதில்
வேகுவா ரவர்வேதம் வெருப்பதால்
தாக்குவா ரவர்தானென்ற தன்மையே 24

தன்மையான தாணிதன் மீதிலே
நன்மையாக நமக்குரை செய்தது
உண்மையான கலிமா சகாதத்துள்
ஓதவோத உலகம் வளருதே 25

(வேறு)

வளர்ந்திடும் வாரு கேளென பீமான்
நபிமறையினுல் வேதம்
அழிந்திடக் கூடாதென்றே
அடங்கிடா வடங்கிடாதே
களத்துடல் போகுமுன்னே
கருத்தினிலாக்கும் ஹக்கே
உள்ளத்தி லோசை கேட்க
உடையவன் ஹபுல் செய்ததாமே 26
செய்திடு வகைதா னென்னோர்
சிறந்திடுஞ் சூரத்தெங்கும்
மையிரு ளகத்தில் நீக்கி
மனதினில் மகிட்சிகொண்டு
கையினி லிருந்த மெய்யே
கண்டவர் கண்டோமென்றால்
பையனுக் கறிவு சொன்னால்
போதமற்றவனென்று பேசுவானே 27
அவனசையாத வண்ணம்
அணுவசையாதே சொன்னேன்
இவனசை யாதவண்ணம்
இருளசையாது சொன்னேன்
தவமிசை சொன்னேன்
தானசையாது நின்னே
இபுலீசு மனுகா துன்னே
இறைவனுக் கிசைந்தவாறே 28
(வேறு கொச்சகம்)
வாறுசொல்லி வாறு கெழுனே
வாய்விடாத மந்திரம்
ஆறுகாங்கி லோடி நின்ற
அலங்கிர்த முழக்கமாம்
கூறுமூல மந்திரந்தான்
குன்குலாவும் ஹூவனவே
ஊறும் ரூஹூ நின்ற ஓசை
இன்பம் நாமன் அறிக்கிலே 29

(எழுசீர்கழிநெடிலடி யாசிரிய சந்த விருத்தம்)

இன்ப மெத்தனை யின்பமெத்தனை
இன்ப மெத்தனை யின்பமே
தன்ப மெத்தனை தன்ப மெத்தனை
தன்பமெத்தனை தன்பமே
என்ப தெத்தனை யென்ப தெத்தனை
எங்கு மெங்கு மொருவனும்
காண்ப தெத்தனை காண்பதெத்தனை
காண்ப தெத்தனை காட்சியே 30

(வேறு-தாலாட்டு)

காட்சி பிறந்ததலம் ஹக்கு நிறைந்த தலம்
காண அருளான தலமாம்
மூச்சு வளர்ந்த தலம் மூலம் பிறந்ததலம்
முன்னெழிவான தலமாம்
பேச்சுப் பிறந்ததலம் பேரும் பிறந்ததலம்
பேரின்ப மானதலமாம்
வாச்சுதென்றே மனது மவுனவிதை வூணினல்
வல்லவனு முன்னே மொழிவான் 31

(விருத்தம்)

மொழிவான ஆலமீதில் முனைகூர்மை நேர்மையதால்
முண்டக தண்டகமதால்
தெளிவான நாயகன் தேகநிகரற்றவன்
தேனமிர்த மானவனுமாம்
ஒளிவான நாயகன் ஒன்று நிகரற்றவன்
ஓதமுடியாத வனுமாம்
வழிநாலு வேதமும் வகையாறு சாஸ்திரம்
மனதில் மிக வுரவாடினும் 32
உறவாக நின்றவன் உயிராய் வளர்ந்தவன்
உணர்வாய் நின்றவனுமாம்
பிறவாதிருந்தவன் பலவேசமானவன்
பாசைநிக ரற்றவனுமாம்
மறவா திருந்தவன் மனமீதுறைந்தவன்
மகாநல்ல நல்லவனுமாம்
இறவா திருந்தவன் இனமோடுறைந்தவன்
யேகவெளியான நெடியோன் 33

(அறுசீர்கழிநெடிலடியாசிரிய விருத்தம்)

நெடியோனே நெடியோனென்றும் யான்
ஓதுகின்ற நித்தனு மூனைப்புகழ்வேன்
அடியேன் நான் அடியேன் நான் கேட்டதற்கெல்லா நீ
அடியேனுக் கருள்செய்வாய்
மிடியேனை ரட்சித்து நிஹமத்தும் ஜீனத்தும்
மகிழ்ச்சினுள் தந்தவனும் நீகின்ற
கொடியே னுன் தேடினேன் என்பிழை
பொருத்தவர்க் குறைத்தபொருளே 34

நின்றபொருள் நின்ற பொருள் நின்றபொருள் நீயே
நித்தமும் நிறைந்தவனும் நீயே
கண்ட பொருள் கண்ட பொருள் கண்டபொருள்நீயே
என்ஹல்பிலும் நிறைந்தவனும் நீயே
தொண்டனுன் தேடினேன் கணவன் பாடினுன்
அண்டருக்கான மூலமாம்
35

மூலமென்ற எழுத்தென்ன மூனைதா னென்ன
முச்சுடராய் நின்றதென்ன முக்கோணமென்ன
ஆலமென்ற அகாரமென்ன உகாரமென்ன
அவ்வெழுத்தும் உவ்வெழுத்தும் அமைந்ததென்ன
ஆலமுடன் நம்முடல் சமைந்ததென்ன
நாட்டமுடன் பூலோகம் வளர்ந்ததென்ன
வாலையென்ற சத்தியென்ன சிவன்தானென்ன
மணியில்நின்ற ஓசையதை வகுத்துச்சொல்லே 36

சொல்லெனவே சொன்னதினல் மூலமாச்சு
சோதியரு ளுட்புகுந்தா ராகுமாச்சு
வெல்லெனவே வெளியாச்சு காற்றுமாச்சு
விபரமுறை அறிந்தவர்க்கு விளம்பலாச்சு
ஹூல்லெனவே ஹூன்னுச்சு ஹூவுமாச்சு
குன்பையக் ஹூன்னின்றதினல் சடலமாச்சு
அல்லாஹூவே அருளாச்சு இருளும்போச்சு அண்டபிண்டம்
மாச்தய்சுயா அறியேன் உன்னுன் 37

ஒன்னிலையில் முளங்குதெங்கு மோசையது
உலகினுள்ளே மாய்கையல்லோ மறைக்குதப்பா
கண்ணிலது தெரியாது செவிகேளாது
கண்மணியே ஹூன்னினவே கலந்தஹூவாம்
மண்ணிலேயும் விண்ணிலேயும் பெண்ணுமாணும்
விபரமுள்ள சத்திசிவன் விளங்குதெங்கும்
தன்னிலையில் நின்றமணி ஓசைகேட்டால்
தானவனும் தானவனும் தானவனுனே 38

தானக நின்றவன்தான் சூட்சம் கேண்மோ
தயவாக உட்புகுந்து சடலம் ரூகாம்
நானவனைக் கண்டுமொழி பேசிக்கொண்டேன்
நாடோறு மெனக்கருமம் நலமாஞ்செல்வம்
கோனவனை குவலயத்தில் கூப்பிட்டாக்கால்
கொஞ்சிவிளை யாடிவந்து முன்னே நிற்பான்
யேனவனை மனம்நோக பேசலாமோ
யேகபெரி யோனென்றால் இறையோனவான் 39

இறையாக நின்றவன்தான் சூட்சங் கேள்மோ
எவ்வுயிர்க்கும் ரூகாகி இணங்கலானன்
மறையாமல் நின்றவன்தான் பேச்சுமூச்சாம்
நாற்றிசையும் பார்வையுடன் கேள்வியானன்
குறையாதவன் நம்மைப்படைத்தா னதி
கோலமெல்லாம் பார்த்திருந்தும் கொலுவிலானன்
பறையாமல் உட்புகுந்து சுவாசமானன்
பரவெளியே நயனத்துடன் பார்த்தான் பாரு 40

பார்த்தானே எங்குமவன் பார்த்தானப்பா
பரவெளியே நயனத்துடன் பார்த்தானப்பா
கார்த்தானே எங்குமவன் கார்த்தானப்பா
காத்தோடே நின்றுகொண்டு காத்தானப்பா
பூத்தானே எங்குமவன் பூத்தானப்பா
பூவாசமாகவுமே பூத்தானப்பா
ஏத்தானே ஏழையென்று கையேத்தானப்பா
எவ்மில் கியாமமட்டும் ஏத்தான் பின்னே 41

பின்னாலே ஏற்றதினால் பிலக்கலாச்சு
பேதகங்கள் வாராமல் பேணிக்கொண்டால்
என்னாலே என்னசெயல் செய்யலாகும்
ஏகபெரி யோனாலே எல்லாங்கூடும்
முன்னாலே சொன்னமொழி சொன்னதாலே
முன்னை வுன்னைக்கண்டதினால் இன்றுங்கண்டேன்
தன்னாலே தன்சொரூபம் பிண்டங்கண்டால்
தாரணியில் சமையமெல்லாந் தனைப்போலாமே 42

தனைப்போலே யானவகை சொல்லக்கேளாய்
தம்பிரான் முஹம்மது முகையதீனும்
தெனைப்போல சுக்கிலமும் சுரோணிதமும்
சேர்ந்ததுபார் விண்ணுக்குள் சிறப்பாயுள்ளே
உனைப்போலே எனைப்போலே பெண்பிறந்தால்
உடையவன்தான் கிருபைகொண்டு ஓதும்லோகம்
பனைபோலே வளர்ந்தாலும் தெரியாதற்கு
பார்த்தறிந்த பெரியோர்கள் பகர்ந்திட்டாரே 43

பகர்ந்திட்டானே வல்லவனும் முஹம்மதோடும்
பார்புவியில் இறந்தவுயிர் அமானமெங்கே
சிறந்தாடும் வழிதனிலே அமானருக்கும்
சேர்ந்து விளையாடுவதே உண்ணுமென்றான்
மகிழ்ந்திட்டார் முஹம்மதுவும் அமானருக்கு
வாசியென்ற வாய்னாலே உண்டேகொண்டார்
மறந்திட்டார் மதிகெட்டா ரிறந்தே போனால்
வல்லவனும் முஹம்மதுவும் முகையதீனுமுண்டே 44

ஒன்றான நாயனுந்தான் அழியமாட்டான்
ஓசையுள்ள முஹம்மதுவு மழியமாட்டார்
நன்றான முகையதீனும் அழியமாட்டார்
நரலோகம் சொர்க்கலோகம் அழியாதப்பா
அன்றாடம் செய்தபிழை யழிந்துபோகும்
அண்டபிண்ட மழியாது அறிந்தபேர்க்கு
விண்டானே நாயகனும் தன்திருவாக்காலே
பொய்யழியும் மெய்யழியாதென்றேவிளம்பினனே

(கண்ணிகள்)

விளம்புகின்ஞன் வல்லவன்தான்
மெய் நிறைந்த ஆகாசம்
தளம்புகின்ற சந்திரன்தானே
இடதுகலை வலங்கொடுக்கும் வாசி
வலதுகலை சூரியனும்
பெலங் கொடுக்கும்
வுட்புகுந்து பேசும்
முஹம்மது வாம் 46
முஹம்மதென்ற வாசமழை
பொழியும் நாதனென்றே
அஹமகிழ்ந்து வல்லவன்தான்
அணிவித்து முயிர்கொடுத்தான்
அழியாத நாயனவன்
என்மனத் துயரம் தீர்த்து
வைத்தார் முஹம்ம திரசூல்
நபியைப்போற்றி 47

(கலிவெண்பா)

எங்கள்நபி தன்னருளால்
இன்பநல மும்பொருளும்
தங்கள் மனம்போலே
தவிலது செய்யும் நாயகனே
அங்கமெல்லா மெங்கு
மழியாதவனை வுகந்தேன்
மங்களமாய் வந்துதித்த
முஹம்மதிற் றசூல்நபியே 48
மங்களமாய் எங்கும் வரிசை
நிகுமத் தருள்வாய்
கங்குல் பகலத்ததோனே
கண்மணியே யென்கோமானே
உங்கள் மனதிரங்கி
உபகாரம் செய்தோனே
ஏங்கள் மனதில் வந்துதித்த
ஏகன் முஹம்மதுவே 49

ஏகபெரியோனே எவ்வுயிரும் ஆள்பவனே
என்னக மறிந்தோனே அடங்காத மெய்ப்பெருளே
என்தாப மெல்லாந் தீர்த்து தனக்குதவி செய்தோனே
என் மோகமதில் வந்துதித்த முஹம்மதிற் றசூல்நபியே 50

மோகமென்னும் பார்வைமுடியாத முச்சுடரே
என்தேகமதி லேயிருந்து திருஞ்செலுத்து கோமானே
பாவமெல்லாம் போக்கி பலங்கொடுக்கும் பாத்திபனே
என்கோபமதைப் போக்கி வைத்தால் கோமானேமுஹம்மது
வே 51

கோமானே எங்கும் குறைநிகாற் றுழுபவனே
ஈமானே நீயிருந்து யீடேற்றந் தந்தோனே
சீமானே வுன்னுடைய தீதாரு தந்ததினல்
ஆமா எனைப்பார்க்கும் அல்லாமுஹம்மதுவே 52

(வேறு)

ஈரிரவு ஓர்தினவாய் இருக்குதே என்யாது
ஏழையெளியேன் முகம்பார்த்து இரங்கிடுமிப்போது
குருவே முகையதீன் அருளால் குத்தெழுத்தை யிருத்தி
குத்தெழுத்தை நோக்கி எந்தன் கூர்வழியைத்திருத்தி 53

மத்தெழுத்து தொனி கேட்டு மனதுநில் பூட்டி
மாண்டசடை மூன்றும் பீர்முஹம்மதென்றே கூறும்
பஞ்சவர்ணமாய் சமைந்து பதினுவில் புகுந்து
பாருலகெல்லா மறந்து பாலமிர்தம் பகுந்து 54

தஞ்சநபி பாதமென்று தானவனுயிருக்கும்
ஆடும்ரூகு ஒன்று சிங்கினூறு லாமடா
னூரில் நின்ற மயில் தானல் வுன்னிபம்மாடா
லாகம் பொங்கி நரதர் சிங்கிலாகுமாடா 55

நடுவினி னின்றமூலம் ஓரலிபு ரெண்டுலாமும் ஹேயும்
மீமும்தா லும் மாகிநின்று மேயுமாமடா
மேயும் ஆறு ஒன்றதாக பேசுமிடம் ஹூம்மடா
நாதன்சேர்ந்து லோகவித்து நாடிஹூவடா
நின்ற மீராறங்குலத்தில் நாசிவாசிடா
இரவுபகல் இருபொழுதும் இருந்துகூவ மெய்யுள்ளாடா
வேதநாலு சமையமாறு
விளம்ப லாமடா 56

மெஞ்ஞான அமிர்தகலை

முற்றிற்று.





# மிகுராசு வளம்

---

(எண்சீர்கழி நெடிலடியாசிரிய விருத்தம்)

ஆதிநபி யார்முடி அறிசின்மேலு மிக்கோர்
அப்பர மகண்டவழி கண்ட வெளிமேலும்
பாதமடிதோயார் அடிபாரையின் கீழ் மிக்கோர்
பருன் திறையின் கீழ்நடக்கப்பறத்தீ னப்பால்
நிதம்தீனில் மக்கமதினா ணகரில் மிக்கோர்
நிகரில்லா துலகுபதி னெண்ணாயிரம் ஆலாம்
ஈதெல்லாம் துகையிலடங்கா பதிகள்முற்றும்
யாவருமவருமாகி நிரைந்திருந்த கோமான் 1

எங்கு மவனு மவருமல்லால் வுயிர் யேதொன்றில்லை
எத்தனைவிதம் விதம் இறை வகுத்தமுத்தும்
அங்கும் நிறைந்த குலம் தங்கள்குலம் போலே
அவ்வுரு வெடுத்த குலம் முற்றவர்க்கரசாகி
தங்கள் குலத்துக்கதிபான குருவென்று
தான்பணிய மற்றவர் கரிவுகுருவாக
பொங்குமறை வேதகலை எங்குமே நிரைந்த
புகழ்பெரிய வேதமகுமூது நிசம்பொய்யோ 2

உண்டென வுலகமுற்றும் ஊளிமுதலுாளி
ஒருநொடி யணுவிடை ஒதுங்கிடாதருருதி
மண்டலமெல்லாமவ சகண்ட வெளிக்குள்ளே
மன்னனெடும் பேசிமிகு ருசில்வசங்க்க
அண்டருளி ஏழிரவு ஓரிரவுமாக
ஆதியு முஹம்மதுமே அந்தரங்கமாக
விண்டது இருபத்தி நாலாயிர மொழியாம்
எத்தமொழி பேச அவர் ஹேதுந்தெரியாதோ 3

ஏதுங்குறையாத இறைதூதர் மகுமூது
ஏகன்அறுசுல் குருசில்லாதநாள் வுண்டோ
வேதமணி யானநபி வெம்பரியிலேரி
வெருதலம் பதிகடந்து வெம்பரி நிறுத்தி
பாதமடி சோகபடி ஏணிவைத்துஏறி
பைத்தஞ்சு மேலஞ்சுபடி பாஞ்சு ஏறினரோ
காதமொரு ஓர்படிக்கு கோடிகோடி படியாயி
காலுகொண்டு ஏறநபி எத்தனையுயரம் 4

உயரமனு போலால் வுயர்ந்தமுளமுண்டோ
ஒருபடிக்கு ஒருபடிமே லானவிதமென்ன
ஐயிரணி ஜிபுரிலெடுத்தெடுத்து வைத்தால்
அப்புரம் எடுக்கயவர் ஆத்துமங்களேயே
வயிறணி முஹம்மதுற் றசூல் வளம்மதாகில்
வகைமுழுதும் சொல்லுவது வந்தமட்டில்லேயே
ஐயிரனி படிகடந்தால் அந்தமுதல் வானம்
அதுக்குமேனு மப்படியே ஏணியேறினரே 5

ஏணியில்லா ஏழுவானுக் கெப்படிமே லானர்
இப்படி இருக்கமுதல் ஏணிபடி ஏனோ
ஆணியில் தெளிந்தவொளி வான மகுமூது
ஆலத்தி லிருக்க அறுசத்தனையும் பாளோ
பூணிய அறிஜில் லொளிவான மகுமூது
புவிமுத்தும் நபியில்லா திருள்சுத்தமானதுபாளோ
ஏணிய நினைவு மெங்குமேநிறைந்த நாயன்
எப்போது மறிஜிலே இருப்பதுகுடியோ 6

இருப்பிடம் அறசென்பது என்னவகை தின்னம்
எங்குஞ்சம தென்றயிறை வேதமறை பொய்யோ
தருப்பிடம் அறசினி விருக்க இரும்பெரும் தலைமனை
திறைகள் இல்லாத இருள் பாளோ
ஒருதற் றறியாம விருபேறருசில் வரிஒன்று படுமுன்
னரசில் ஒன்றில்லா ததுபாளோ
நிரப்பிய நபிக்கிறை இரக்கிய மறையை
நிச்சயத்தை பொய்யென நிலைநிறுத்தலாமோ 7

நிலைநிறுத்தும்மான மிகுராசி விஷளம்
நிலத்திலறிவாளர் இந்த நிச்சயம்தெரியும்
வுலகுபதிமேல் கதிரனேகம் துலைதூரம்
வுள்ளங்கையி பழிங்கியொழி ஓரெழுத்திலானல்
கலைநெடுந் துலைகதிர் அனேகந் துலைதூரம்:
கண்ணுமுன் கண்ணுடியால் கைவசத்திலாகும்போல்
இலகுபதிக் கப்பாலும் இறையிருந்தால் என்ன
இருவிளி நடுவிலொற் றெழுத்தையு மிருத்தேன் 8

இருத்துமென்ன யான தொருதான தொருபள்ளி
இருவரு மிணக்கமதில் பாய்ந்த விந்து தள்ளி
கருவுத்த எழுத்தென வுறைப்பதந்த புள்ளிகாணும்
மோர் எழுத்திடை வுறைப்பது நகத்தாஹும்
சுருபத்தை எழுந்தகறு நாதநிறம் வெள்ளை சொல்வேன்
யிருவிளி நடுநிலையுள்ளில்
அருபத்தை யரிந்தவன் தனையறிந்த மிக்கோன்
அப்பரம் அறிந்தவகை ஆகும் மிகுராசை 9

ஆகும் மிகுராசுட வழமொழியதனை ஆலத்தில்
லுறைக்க அறிவாழர் மனம்வல்லை
ஏகநபியார் ருடவழமொழியதனை எவ்வள
வரிந்திடார் மனுக்குலங்கள் யாவும்
சாகுவது கடன் நமக்கு பிறந்தகுலம் முற்றும்
சஞ்சல கடலில் லாவார் துஞ்சமஞ்சுமில்லை
சாகுமுன் அனத்தவர் குறைக்கும் முபகாறம்
சாத்துறேன் சுகுதுவழம் எண்ணில்லா மகிமை10

நூறு நூறுயியிரம் கோடிகாலம் முள்ள
நூர்ஞெளிவை யான் கண்டு
பார் லெல்லா தீனவ ரறிய என்றன்
வாக்கு மனதுடன் வையகர்க்கும்
வுரைத்தேன் பதினெண்ணுயிரம் கவி யனத்திலு
இறை அஹம்மது முஹம்மதுவை போற்றி
பீருமுஹம்மது செஞ்சோன் மிகப்பிரியமா
யுறைத்திட்டேன் ஆமீன் ஆமீன் 11

மிகுராசு சுகுதுவளம் முற்றுப் பெற்றது.





## இஸ்மாயில் அரபி சாய்பு இயற்றியது

# றகுமான் பேரில் முனாஜாத்து

(கண்ணிகள்)

ஆலம் நிறைந்திடும் அஹது வஹது சமசாதாகவே
ஆலமடங்கலும் நிறைந்தோன
நீதி நெறியாய் நிறைந்தோனே
நினைவுக்குருவாய் ஆனவனே
சோதி சுடரொளிவாய்
சுருதியாய் நிறைந்தோனே
ஆதிஹக்ஹு றகுமானே
ஆதிகிருபை செய்வாயே காப்பு 1

சோதிக்கொடியே சுடர்க்கொடியே
சோதி ஒளிவே சுடர்மணியே
நீதிச்சுடரே நெறிவிளக்கே
நீதிஹக்கே நீதுணையே
சோதிமுச்சுடர் அழகாய் நின்றோனே
முதல்வனே ஹக்கே நீ
ஆதி அச்சுடருக்குள் அஹதானோனே
ஆதிரகுமத்து ஆனவனே 2

வள்ளல் நபிஇரசூல் பாதார விந்தம் மனதுள்
கொண்டு வுள்ளினுல் நினைத்தேன்
கள்ள மில்லாமல் கருதி கருத்திலுவி
செய்த காரணத்தால்
நல்லருளால் றகுமான் முஹம்மதை தினமு
காண நல்லுதவி செய்வாய்
நற்செயல் செயமும் நாட்டமும் றகுமான் முஹம்மது
முகையதீனைக் காணவும் எனக்குதவி தந்து 3

கல்வி குருத்தே எங்கள் நாயகம்
முஹம்மது கலிமாக் கனியை
கல்பில் தரிபட செயம்குடுத்து உபதேசம் பெற்று
சிந்தையில் வைக்க
கல்பை அறிந்து கரை சேர்ந்துக் கொள்ள
கருணை செய் கலிமாவை
கலிமாவும் காவில் கல்பிலுதையமாக
ஹக்னே துதி செய்வாயே 4

எல்லா புகழும் இறையோனுக்கும்
எங்கள் நபி முஹம்மதுக்கும்
வல்லோன் திருவுள மாயிருந்த
மறை நெறி முகையதீனுக்கும்
வல்லோன் திருவருள் மாகாதிருந்த
ஒலிமார்களுக்கும்
வல்லோன் திருவருள் மங்களமாக
கலிமா வுயிர் எழுத்தை 5

வலம் இடம் மாக வளர்ந்தோங்க செய்யும்
வள்ளல் இரசூலருளால்
செல்வம் பெருகும் தீன்கூரி
நின்று செயம் பெறலாம்
அல்ஹம்துல் நின்ற அமைப்பை
அறிந்து ஐந்தொகுத்தும்
கல்பை அறிந்து கரை யேறிக்
கொள்ளக் கடனிதுவே. 6

ஹமலமில் நடப்பதுஹேமீமும்
ஹா-ம் ஹா-ம் ஹா-ம்மெனவே
ஹல்பில் நடப்பது ராப்பகலும்
மெய்சுடராகி விரிந்தோனே
அச்சுடருக்குள் அமைந்தோனே
ஆலமடங்கலும் நிறைந்தோனே
அசதி மறதி இல்லானே
ஆலமடங்கலும் நிறைந்தோனே 7

நீதிக் குருவாய் நிறைந்தோனே நெறியாய்
எங்கும் நிறைந்தோனே
சோதி ஒளிவாய் இருள் அறையில்
துவற்கம் இருந்த பரா பரனே
ஆதி அருளாய் முஹம்மதுவை
அந்தச் சுடரில் பிரகாசமாய்
நீதி குருவை சுட்டி காட்டி
நீதம் செலுத்து றகுமானே 8

ஹக்கே ஹக்கே றகுமானே
கண்ணே பரா பரனே
ஹக்கே ஹக்கே கருத்தாக
கண்ணே மணியே பரா பரனே
ஹக்கே ஹக்கே கண்மணியே
கருத்தில் கிருபை செய் பரா பரனே
ஹக்கே ஹக்கே புருவம் நடுச்சோதிச்
சுடரே பரா பரனே 9

மேலாம் பதத்தில் ஆனவனே
வேந்தே வேந்தா வினை தீர்ப்பாய்
கத்தன் பதத்தில் பணியலானேன்
கருணை புரிந்து ரக்ஷித்தும்
மெத்த வணக்கம் அல்லாஹா
மேலோன் றகுமத்தும் தீதாறும்
கத்தனே யொருநாளும் மறவாமல்
காட்சியும் மீட்சியும் தருவாயே 10

நாட்டம் தந்து நடந்து கொள்ள
நாதா உன்றன் கிருபைதன்னை
தேட்டம் தந்து திருக்கருணை
தெளிவை தருவாய் உன்கிருபை
வாட்டம் தீர்த்து மலரடிக்குள்
வள்ளல் நபிஇரசூல் பதத்தில்
நாட்டம் தந்து காத்தருள்வாய்
றப்பே பெரிய றகுமானே 11

றப்பே றப்பே நாயகமே
நபியே றப்பில் ஆலமீனே
றப்யே றப்பே நாயகமாயி
நாதமணியாய் நின்றவனே
றப்பே றப்பே றப்பாக
நாத ஒளிவாய் நின்றவனே
றப்பே றப்பே றப்பாக நடனத்துள்ளே
ஆடும் பெரிய றகுமானே 12

கருவுங் குருவும் நீயிருந்து
கண்ணே குத்துபா கண்மணியே
மருவுஞ் சமயம் நீயிருந்து
வள்ளல் முஹம்மதாய்க் காத்தருளும்
அருளே அருளாய் நீயிருந்து
ஆதிகுதாத்து ஓசைகேட்க
அருளே அருளாய் நீயிருந்து
ஆதிவுன் கிருபை செய் றகுமானே 13

ஆதி யனாதிக்குள் ளிருந்த
அலிபுலாம் மீம்தால் ஹெஆனேனே
நீதி நெறியாய் நிறைந்தோனே
நிர்ரஹிமு நீ ஆனவனே
சோதிச்சுடரா யிருந்தவனே
துலங்கு மணியோசை யானவனே
வேதக்கடலாய் நிறைந்தோனே
வேந்தே பிஸ்ஸுமில் ஹிர்றகுமானே 14

வேதம் களுக்குள் புறுக்கானிலே
விளம்பு பிஸ்மில் அர்ரபிஹூல் அயலாவிலே
ஆதந் தனைத்துதிப்பவருக்கு
அருளும் குருவாய் நிறைந்தோனே
நீதந்தந்து ரட்சித்திட
நெறியே நெறியே ஆனவனே
ஆதம் அஹதாய் ஷமதுவாகி வாஹிது வாகி
அகத்தில் ரக்ஷித்திட ஆதிகிருபைசெய்றகுமானே

புவியு மடங்கலும் ஒன்றாகவே
ஹூவுக்குள்ளே இறை கூவும் ஹக்கே
நபியும் நாதனும் ஒன்றாகவே
நாட்டம் கொடுத்த ஹக்கேநீ
கவியும் கலிமாக் குள்ளிருந்தே
கண்ணே ஹக்கேநீ
நபியும் ஆலம் நிறைந்தோனே
ரப்பே ஹக்கே ஆதி றகுமானே 16

வானம் புவியும் நிறைந்தோனே
மண்ணும் பலவுயிர்க் கெல்லோருக்கும்
நாணம் நன்மை கொடுப்பவனே
நன்மை ரகுமத்து ஆனவனே
நீதந் தவறா திருப்பவனே
நெறியாய் நெறியாய் நின்றவனே
ஆதம் அருகாய் இருப்பவனே
அகதுசமதாய் நிறைந்தோனே 17

வேதக் கடலாய் விரிந்தோனே
வேந்தா வேந்தா வினைதீர்ப்பாய்
நாதக்கடலாய் இருந்தவனே
நாதா உன்கிருபை
நீதக்கடலாய் நின்றவனே
நெறியாய் நெறியாய் இருந்தோனே
ஆதிக்கடலா யிருந்தோனே
ஆதிஹக்கே றகுமானே 18

பலதுங் கோலஞ் செய்பவனே
பாரில் மனுவைப் படைத்தவனே
வலுமை வளியும் காட்டினவன்
வல்ல பெரியோன் ஹக்குநீயே
நீதியும் நன்மை வழுவாமல்
நாட்டந்தருவாய் ஹக்கேநீ
கவியுங் கலிமா உட்பொருளை
காட்டு ஹக்கே றகுமானே 19

நீநாயகமா யென்னாளும் உனதுபதம்
தினந்தொழ ஆதி றகுமானே
நீநாயகமா யென்னாளும் ஒன்று யிருந்தோனே
தாணி ஆதி றகுமானே
நீநாயகமாய் நாதவடிவா யிருந்தவனே
நாலு திசையும் ஆதிறகுமானே
நீநாயகமாய் அணுவுக்கணுவாய்
அனத்திலும் நிரைந்தே ஆதி றகுமானே 20

ஏழைக்குதவி செய்பவனே
ஏகபெரிய எம்மிறையோனே
நாளைக்கழித்து விடலாமோ
நாதா ஹக்கே நபிமுகம்பார்
வாழும்பருவத்தில் வுள்ளிருந்த
வண்மை ரசத்தையும் தந்திடுவாய்
மீளும் பாதை திறந்திடுவாய்
நீதி பெரியஹக்கே றகுமானே 21

நீதிநெறியாய் நின்ற நிலை
நேர்மை தெரிந்திட நெஞ்சினுள்ளே
ஓர்மை தெரிந்திட வுள்ளுருவாய்
உரைப்பாய் ஆதிஹக்கேநீ
நேர்மை தெரிந்திட அடியேனை
நீயே காக்கும் நேர்வழியை
காட்டிக்கமலத் துட்பொருளைக்கண்டு
ஹக்கே துதிக்க பலனதருவாய்றகுமானே 22

எட்டுகாலு மினமறிய
ஏழை யடியேனுக்குதவி செய்நீ
எட்டுகாலு மொன்றுபட
ஏகன் கிருபை செய்வாயே
கட்டுங்கலைகள் நாலுமொன்றாய்
கமலத்தி லிருத்திக்கொள்வதற்கு
எட்டுகாலு மிணங்கி ஒன்றுபட
ஏகன் கிருபைசெய் ஆதிறகுமானே. 23

திருவில் பிறந்த வார்முஹம்மதியா
தீனோ ருலகுக் காசுசெய்ய
மருவில்லாமலே வுலகை யாள
வள்ளல் முஹம்மதாய் வந்த வள்ளல்
அருவ முருவமில் லாதவனே
ஆதிகுதாத்து ஜீவத்துஆளும றகுமானே
அருவ யுருவாய் நீயிருந்து
அறிவினில் தோன்றும் ஆளும் றகுமானே 24

ஆதிமுஹம்மதா யிருந்தவனே
ஆலமடங்கலும் நிறைந்தவனே
சோதி ஒளிவாயிருந்தவனே
துலங்கு மணியாய் ஆனவனே
நீதிசெலுத்தும் றஹிமானே
நிறைந்த திருப்பாதம் தினம் வணங்க
ஆதிரகுமத்துக்கடலாகி
ஆதிஹக்கே ஆதிறகுமானே 25

கடலில் கடலாய் விளைந்த முத்து
கண்ணே குத்துபா கண்மணியே
கடலில் சரமாய் விளைந்த வள்ளல்
வானோர் புவிக்கெல்லாம் தீனவராய்
நபியின் வும்மத்தோர் வுலமாக்க ளனைவருக்கும்
நாயன் கிருபை சபாயத்துடன்
கவியின் கலிமா இரகசியத்தை
கண்டுகொண்டவர் தீன்குலமே 26

97417

தீனே தீனே தீனவர்க்குத்
திகட்டாக்கனியே கலிமாப்பொருள்
நான்காறுங் கூட்டிவொன்றாய் நாடிக்கொள்ள
நாதன் றகுமத்து ஆனகடன்
ஆளுமாளு மாசக்குள்ளே
அடங்கியிருந்த அருங்கடல்தான்
நாளும் நாளும் புசிப்பவர்க்கு
நாட்டக்கடலாய் றகுமானே 27

தீனே ருலகுக்குத் தெளிவாகவும்
தீனை யறிந்தவர்க்கு குருவாகவும்
தீனையறியாம லுலகத்துள்ளோர்
தீன் தீனென்று செப்பியென்ன
தீனையறிந்து செயலறிந்து
தீனில் ஆவதற்கு
தீனையறிந்து கலிமாநிலை செயலை
யறிந்தோர்கள் தீன்குலமே 28

குலமே அறிய அளிபுநிலை
குறித்து நோக்கும் வல்லவர்க்கு
தலமே தலந்தானும் தான் தெரியும்
தஹ்ரீத்து மேலிருத்தி வைக்கும்
பலமே பலம்பெற்றுக் கொள்வதற்கு
பார்த்து நிலையறியவேணும்
கலமே கலந்தானும் எழுதியிருக்கும்
ஹக்கே ஹக்கே றகுமானே 29

கமலத்துள்ளே கருத்து வைத்து
கண்ணே னுஹத்தா யமைந்தவனே
நயனத் திடையில் நடனமாடும்
நாட்டந்தவறா திருக்கவேணும்
ககன வட்டம் கண்டு கொண்டு
கருத்தில் சுடரைத் தான்பார்த்து
மவுனக்கொலுவைப் பார்த்தறிந்து
வள்ளல் நபி இரசூலென்றேத்தே 30

எத்து நயனத் திடைநடுவில்
இருகோணவாசி எழும்பிடவும்
தாத்து கமலத் துள்ளிருத்தி
தருகா வென்ற தலத்தினுள்ளே
கோர்த்துப்பிடித்துக் குண்டலியை
குன்னென் றெழுப்பிக் குறிப்பறிந்து
சார்ந்து சார்ந்து தனிநினைவாய்
ஹக்கே ஹக்காகும் றகுமானே 31

இல்லென் றெழுத்தை மனதினி லூன்றி
இருதய கமலத்துள்ளே
வில்லென்ற விசையைப் பூட்டி
மெய்ப்பொரு ளறிந்துகொண்டு
கல்பினில் கலையைக்கண்டு
காரணசர்க் குருவினாலே
அல்லாஹு வென்ற அமைப்பைப் பார்த்து
ஆதியே ஆதரவு வைத்தேன் ஆமீன் 32

ஆமீன் ஆமீன் அகத்துக்குள்ளே
அரும்பொருள் ஒன்று தோன்றி
சோதியாய் சுடராய்த் தூண்டா
மணிவிளக்காய் சொரூபந்தோன்றி
நீதியாய் நெற்றிக்குள்
கண்ணாடி தோன்றி
நிச்சயமாய் நீலவர்ண
நிலையுந்தோன்றி 33

பத்தியா யறிவுநிலை தன்னைப்பார்த்தால்
பரமகுரு தெரிசனமும் ஹக்குநீயே
கல்புக்குள் வாசிதோன்றி
கமலத்துள் சோதிதோன்றி
திக்குக்குள் திக்கு தோன்றி
திருவருள் நடனம்பார்த்து
ஹருபுக்குள் ஹருபா தோன்றி
ஹக்கனைத் துதிக்க ஹக்கே 34

சிமான் அரசுக்கு அலிபுவியின்
சிறைப்பொருந்த தன்செயலால்
கோமான் தனையே போற்றும் அவுலியாக்களுடைய
பொருந்தும் கல்பை யறிபவனே
அமானித கலிமாவை அருளச்செய் சதாகாலம்
சக்ருத் தடுக்கும் நேரம்
சடுத்தம்பேசும் யிபுலீசு சற்றே யெணவர்தணுகாமல்
தயவுபொருந்தும் றகுமானே 35

பிடித்தேன் உனது திருப்பாதம் ஜெயமாய் நாளை
மகிசரிலே திறமாய் காப்பீர் றகுமானே
நாட்டமுடனே சிறியோனும் நல்லபுவியில் கடையநல்லூர்
நல்ல முஹம்மது செய்யது புதல்வன் இஸ்மாயிலுக்கும்
கூட்டும்பொருளும் இல்முகளும் குருனும் அறிவும் வழிப்பாடும்
கூடியதிக்கிர் ஓசைகளும் குளிரத்தருவீர் றகுமானே
கேட்டபடியே தாணுமெங்கள் கிருபையுடைய பூரணமே
தொண்டன் பிழை பொறுத்தே வாசம் பெருகுஞ் 36
சொர்க்கபதி வாழ்வுந் தருவாய் றகுமானே

ஆமீன் ஆமீன் யாரப்பில் ஆலமீன்

றஹ்மான் முனஜாத்து முற்றிற்று.





பிஸ்மில்லாஹிர் றகுமானிர் றஹீம்

தற்கலை, பீர்முஹம்மது சாஹிபொலியுல்லா அவர்கள் பேரில்

# மத்ஹு மௌலித் ஷரிபு
# காரண சரித்திரம்.

---

திருவிதாங்கூர், ஷேகு முஹையத்தீன் ஆலீம் சாய்பு அவர்கள்
அரபுத்தமிழில் இயற்றியதை கடையநல்லூர், பேட்டை,
ந. சை. இஸ்மாயில் அரபி சாய்பு அவர்களால்
செந்தமிழில் மொழிப்பெயர்த்து அச்சிலிடப்பட்டது.

---

ஸலாத்துன் வ தஸ்லீமுன் வஅஸ்காஃதஹிய்யதி
அலல்முஸ்தபல் முக்தாரி கைரில் பறிய்யதி
வதாயிமதன் மாதாம முலகுல் ஜலிய்யதி
அலல்ஆலி வல் அஸ்ஹாபி பீருமுஹம்மதி 1

(இ-ள்) ஸலாத்தென்னுங்கருணையும், ஸலாமென்னும் ஈடேற்றமும், மகா பரிசுத்தமான காணிக்கையும் சகல படைப்புகளுக்கும் மேன்மை தங்கியவர்களும் தெரிந்தெடுத்து தெளித்து வடித்தெடுக்கப்பட்டவர்களுமாகிய நமது நாயகம் முஹம்மது முஸ்தபா ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லமவர்கள் மீதும் அவர்களினது கோத்திரத்தினர் மீதும் அவர்களினது ஸஹபாக்களாகிய தோளர்களின் மீதும் சகல ராஜாக்களுக்கும் எஜமானாகிய இறைவனின் இராஜாங்கம் நேமமாக இருக்கும் காலமெல்லாம் ஓயாது எப்போதும் உண்டாவதாக.

லகல்ஹம்து யாரப்பி அலாகுல்லி நிஅமத்தின்
ஸலாத்துன் அலாதாஹா ஸலாமுன் பிறஹ்மத்தின்
வ ஆலின் வஹூ ஸஹ்பின் தவாமன் பிஇஸ்மத்தின்
ஷ ரஹ்து பிமத்ஹில் கௌதி பீருமுஹம்மதி 2

(இ-ள்) என்னைப் படைத்து வளர்த்து ரக்ஷிக்கும்படியாகிய ஆண்டவனே, சகலபாக்கியங்களையும் நீ தந்தருளியதின்

பொருட்டு எவ்விதபுகழும் புகழ்ச்சியும் உனக்கே தகுமான தாகும். உன்னுடைய றகுமத்தென்னும் கிருபையோடும் உன்னு டைய கார்மானத்தோடுமுள்ள ஸலாத்தும் ஸலாமும் தாஹா என்னும் நமது நாயகத்தின்மீதும் அவர்களினது ஆல் அஸ்ஹாபு கள் மீதும் ஓயாது எப்போதும் உண்டாவதாக, எங்கள் நாயக மாகிய பீருமுஹம்மது ஸாஹிபவர்களின் பிறப்பு வளர்ப்பு காரண சரித்திரங்களை விவரிக்க ஆரம்பஞ்செய்கின்றேன்.

வ கம் மின் உலூமின் பில்மஆறிபி தில்உலா
வ பைய்யன்தஹா மன்காண ஹையன் ஜலா அலா
லிஃகாயி ரிலாஇல்லாஹி ஜல்ல வ கத் அலா
வ ஷௌக்கி பிஹா யாகௌது பீருமுஹம்மதி 3

(இ-ள்) மஹா உயர்த்தியும் வலுப்பமும் தங்கிய அல்லாஹுத்த ஆலாவின் பொருத்தத்தைத்தேடும்பொருட்டு மேலான ஞான அறிவுகளடங்கிய எத்தனையோ உயர்தரக்கல்விகளை மானிட வர்க்கத்தாருக்கு பிரசுரஞ்செய்தீர்கள். பீருமுஹம்மது என்று நாமந்தங்கிய கௌது நாயகமே, என்னுடைய ஆசையானது அக் கல்விகளைக்கொண்டே பூணிப்பாய் இருக்கின்றது.

வ குல்த பிஹாறல் இல்மி ஹக்கன் அமீக்கஹா
வ அலுஹர்த்த ஸிற்றன் ஜௌஹரன் வ ஹகீஃகஹா
அஸில்த பிஹா கம்மன் வ கத்தன் வ லீக்கஹா
ப அந்தல்லதீ ஸுமீத்த பீருமுஹம்மதி 4

(இ-ள்) நாயகமே தாங்கள் மெய்யாகவே ஆழமான அறிவென் னும் கடல்களில் மூழ்கி அதன் ரத்தினம் போன்ற இரகசியத்தை யும் பிரசியத்தையும் வெளிப்படுத்தினீர்கள். அதன் பொருட்டு துக்க சாகரத்தையும் கடினமான வருத்தத்தையும் நிவர்த்தி செய் தீர்கள். பீருமுஹம்மதென்று அழைக்கப்பட்ட திருநாமத்துடைய வர்கள் தாங்களேயாகும்.

பி மௌலிதி க த்தென்காசி இஸ்ஸன் வ கத்ஜலா
வ மற்கத்கல் உல்யா பிதக்கலையில் வுலா
அலா ஸாயிரில் புல்தானி பலுலன் வ கத்கலா
வ யாலைய்யிதீ கௌதி வ பீருமுஹம்மதி 5

(இ-ள்) பீருமுஹம்மதென்று அழைக்கப்பட்டவர்களேறப்பிடமண்டாடி என்னை ரக்ஷிக்கக்கூடிய நாயகமே, தாங்கள் பிறந்த இடமாகிய தென்காசி நன்னகரமும் தாங்கள் அடங்கிய ஸ்தலமாகிய தக்கலை என்னும் நகரமும் இந்த இரண்டும் மற்ற நகரங்களை விட வரிசை யடைந்தது.

வ கம் மாலிகின் ஜாஊ பி தௌஇன் அம்றிக்கும்
வ அஹ்தௌக்க அற்லன் லில்குஃஸ ிகப்ரிக்கும்
ஃமா தம்பிமாறின் கத் அதாஊ லிகத்றிக்கும்
மஹத்த பிஹிம் லீஹ்றன் வ பீருமுஹம்மதி 6

(இ-ள்) எத்தனையோ ராஜாராஜாக்களும் சிற்றரசர்களும் தங்களின் உத்திரவுக்கு கீழ்ப்படிந்ததுமன்றி தங்களின் ஸமாதிஸ்தலத்திற்காக சிற்சில நிலங்களை சொந்தப்படுத்தி வைத்திருக்கிறார்கள். தங்களின் காரணத்தையும் பதவியையும் கண்டு தங்களுக்கு வழிபட்டு அடிபணிந்த மாடம்பிமார் போல் கொற்றரசர்களுக்கு ஏற்பட்டுள்ள வஞ்சனை சூனியங்களை தாங்கள் அடியோடு அழித்து நிவர்த்தி செய்தீர்கள்.

பி பிற்கத்தி குப்பாறின் கஸல்த பிஸஜ்றிஹிம்
வ அத்கலக்கல் குப்பாறு கஹ்றன் பிஹஜ்றிஹிம்
வ கத் கப்பலூ பாபன் பிஹி கைற ஹிஜ்றிஹிம்
ஹறஜ்த்த பிகைறில் பத்ஹி பீரு முஹம்மதி 7

(இ-ள்) பல்பனுபுரம் கோட்டைக்குள் அமைந்துள்ள தடாகத்தில் தாங்கள் ஸ்நானமும் அனுஷ்டானமும் செய்துவருவதைக் கண்ட காபீர்கள் அத்தடாகத்தினிடம் போகாது தங்களை விலக்கியும் விலகிக்கொள்ளாததின் நிமித்தம் அநீதமாக அவர்களின் ஓரையில் அகப்படுத்தினார்கள். நாயகமே தாங்கள் அவ்வரையை யாரும் திறப்பதன்றி வெளிவந்து தோன்றலானீர்கள்.

வ கம் தீஉலுவ்வின் நல்த்த ஹாம் பைல றுஷ்திக்கும்
வ கம் தீ அக்கீ மின் ஜாத்த ஹாம் வுல்த நக்ஷ்திக்கும்
வ கம் ஸாபிலின் அஹ்லேத்த ஹாம் லுத்ப றுஷ்திக்கும்
வ அஹ்லா வலிய்யில்லாஹி பீருமுஹம்மதி 8

(இ-ள்) எத்தனையோ உயர் பதவியுடையவர்களுக்கு தங்களின் நேரான வழியைக்காட்டி பூர்த்தியாக்கி வைத்தீர்கள், எத்தனையோ குழந்தை யில்லாத மாதர்களுக்கு குழந்தை உற்பத்தியாகும்படி வாக்களித்தீர்கள். எத்தனையோ உயர்பதவியில்லாத பேர்களை தங்களின் நேர்வழியாகிய கிருபைக்கடலின் பொருட்டு அவர்களை உயர்பதவிக்குக் கொண்டுவந்தீர்கள். அல்லாஹுத்த ஆலாவுடை அவுலியாக்களில் மகா மேலாம்பரமானவர்களில் ஒருவர் தாங்களேயாகும்.

வ நாம ரஸூலுல்லாஹி பீ பக்திக்கல் உலா
வ ஹௌலஹி அஸ்ஹாபுன் லெஹுன்னூரு ஷஹ்ஹலா
றஆ ஹா வலிய்யுன் ஸதகத்துல்லாஹி துல் உலா
பி றாயாயிஹி கத் புக்த பீருமுஹம்மதி 9

(இ-ள்) நமது நபிகள் நாயகம் ரசூல் ஸல்லல்லாகு அலைஹிவஸல்லம் அவர்களும், அவர்களினது ஸஹாபாக்களும் படைசூழ அலங்காரத்தோடும் ஒளிவு பிரகாசத்தோடும் வந்து தங்களின் துடைமீது தலைவைத்து நித்திரை செய்ததை மேன்மைதங்கிய நாதாவாகிய சதகத்துல்லா ஒலியவர்கள் அயர்ந்த நித்திரையில் கண்டது கொண்டு தாங்கள் மேல்பதவி யடைந்தீர்கள், உரை வாக்குப்பெற்றீர்கள்.

தகிய்யுன் நகிய்யுன் ஸாஹிதுன் காமிலுல் வலிய்
றலிய்யுன் பி அம்றில்லாஹி தில் கறமில் வலிய்யி
றஷீதுன் பிஇல்மின் குல்ல ராஜின் பிஹி வலிய்
ப நிஹ்ம வலியியுல்லாஹி பீருமுஹம்மதி 10

(இ-ள்) தாங்களாகிறவர்கள் தக்வா வென்னும் உடையைத் தரித்தவர்களாகவும் பாவத்தை விட்டும் பரிசுத்தமானவர்களாகவும் இல்லறத்தை வெறுத்து துறவறத்தை சினேகித்தவர்களாகவும் ஹாமீலான வொலியாகவும் கொடை கொடுக்குமென்னத்தக்கதாகிய அல்லாஹுத்த ஆலாவின் உத்தரவைக்கொண்டு பொருந்திக்கொண்டவர்களாகவும் கல்வியை ஆதாவு வைத்தவர்களுக்கு நேர்வழி காட்டுகிறவர்களாகவும் பீர்முஹம்மதென்று அழைக்கப்பட்டு கீர்த்தி பெற்றவர்களாகவும் ஆகிவிட்டீர்கள்.

வ கம் மைய்யிதின் அஹ்யைத்த ஹா்ம்ஜா்த ஹப்றிக்கும்
வ கம்ஹாலிக்கின் அன்ஜைய்த்த ஹா்ம் நால ஜப்றிக்கும்
வ கம் ஸாறிக்கின் அஹ்மைத்த ஹா்ம் பாப கப்றிக்கும்
வ அஜ்லா வலிய்யில்லாஹி பீருமுஹம்மதி 11

(இ-ள்) எத்தனையோ மௌத்தாகிப்போன மையத்துகளை அல்லாவுடைய உத்தரவைக்கொண்டு ஹயாத்தாக்கி வைத்தீர்கள். எத்தனையோ ஹலாக்கில் ஆகப்பட்டவர்களை ஈடேற்றமாக்கி வைத்தீர்கள். தங்களின் கபுராகிய சமாதி ஸ்தலத்தில் திருட வந்த திருடர்களுக்கு அவர்களின் கண்களைக் குருடாக்கி வைத்தீர்கள். பீர்முஹம்மதென்றழைக்கப்பட்ட அல்லாவுடைய ஒலியானவர்களில் மிகவும்பிரசங்கமாகிவிட்டீர்கள்.

வ பாபுக மப்தூஹா்ன் லினைலில் ஹவாயிஜி
வ ஜாஹா்க மத்பூத்துன் லிகுல்லிற் றவாயிஜி
ஜனுபுக்க மஹ்மூதுன் லிராஜின் நவாயிஜி
அதைன பிகல் ஹாஜாதி பீருமுஹம்மதி 12

(இ-ள்) யாரார் தங்கள் தங்கள் ஹாஜத்துகளைப்பெற்றுக் கொள்ள நாடினவர்களுக்கு தங்களுடைய வாசலாகிறது திறந்து வைக்கப்பட்டதாக இருக்கிறது. தங்களை ஆதாரவு வைத்தவர்கள் அடங்கலுக்கும் தங்களின் கீர்த்தியானது பெலவந்தமானதாயிருக்கிறது. ஈடு மீட்சி பெற ஆதாரவு வைத்தவர்களுக்கு தங்களின் சமுகமானது புகழப்பட்டதாக இருக்கிறது. ஆகையால் பீர்முஹம்மதென்று நாமம் சூட்டப்பட்டவர்களே எங்களுடைய ஹாஜத்துகளை தங்களின் சன்னிதானத்திற்கு கொண்டுவந்தோம்.

கராமாத்துகல் வுலுமா பிதஷ்றீபி தீனினா
வ சௌலத்துகல் உல்யா பிதப்லீகி அமனினா
வ மஹ்றூபுனல் ஹாதீ அலீமு அமீனினா
தவஸ்ஸல் லெதைஹில் அம்ற பீருமுஹம்மதி 13

(இ-ள்) தங்களின் மகா வலுப்பமான கருமத்தென்னும் காரணங்களாகிறது எங்கள் மார்க்கத்தைச் சிறப்பாக்கிவைத்து விட்டது தங்களின் மேலாம்பரமான சமாதிஸ்தலமாகிய பூங்

காவனமென்னும் தோட்டமாகிறது. எங்களின் மேலெண்ணங்களை நிறைவேற்றிவைக்கக்கூடியதாக இருக்கிறது. சகல கல்வியுங்கற் றுணர்ந்த நமக்கு நம்பிக்கையாகிய நேர்வழி காட்டக்கூடிய நாம் முகப்பத்து வைக்கப்பட்டவர்களுமாகிய பீர்முஹம்மதென்று கூறப் பட்ட நாமமுடையவர்களிடத்தில் சிபார்சு தேடக்கூடியவர்கள் தேடிக்கொள்ளுங்கள்.

வ கம் ஸாறதுஇல்மின் வஇஸ்ஸின் வ பாஹிறி
வ ஜாஹின் வ முத்தாஹின் வ கௌதின் மபாகிறி
அலா பாபி மௌலின் மின்க தா முதபாகிறி
வ நாலூ பிஹல் ஹாஜாத்தி பீருமுஹம்மதி 14

(இ-ள்) பீர்முஹம்மதென்றழைக்கப்பட்டவர்களே பெருமை தங்கிய தங்களின் ஸமாதி ஸ்தலத்தின் வாயலின்மீது எத்தனையோ கல்விமான்களும், எத்தனையோ கௌசவுமுடையவர்களும் தலைமை தனத்தை யுடையவர்களும் தங்களைப் புகழக்கூடியவர்களும், பெருமை வாய்ந்த கௌவுது பட்டமுடையவர்களும் தங்களின் ஸியாரத்துக்காக வந்து தங்கள் தங்கள் ஹாஜத்துக்களைப்பெற்றுக் கொண்டார்கள்.

வ யாசைய்யிதீ ஷைகீ வமுன்ஜீ வ முற்ஷிதி
நிலல்லாஹி அல்ஹிக்னீ பி பைஸித் தாஷ்ஷுஊதி
வயப்ன வலியயின் மல்கரின் கைற முற்ஷிதி
அகித்னீ வலிய்யல்லாஹி பீருமுஹம்மதி 15

(இ-ள்) எனக்கு நேர்வழி காட்டக்கூடியவர்களும், என்னை ஈடேற்ற மாக்கி வைக்கக்கூடியவர்களும், எனக்கு ஷைகுமாகிய என்னுடைய நாயகமே தங்களின் நேர்வழியின் பொருட்டால் அல்லாஹுத்த ஆலாவுடைய பொருத்தம் என்னைச்சேரும்படி செய்யுங்கள் நேர்வழி காட்டுகிறவர்களில் மேன்மையானவர்களே மல்க்கர் ஒலியினுடைய குமாரராகிய பீர்முஹம்மதென்றழைக்கப் பட்டவர்களே ஆண்டவனுடைய ஒலியானவர்களே என்னை ரக்ஷித்துக் காப்பாற்ற துஆசெய்யுங்கள்.

அதைத்துக்க யாகௌதீ வ கைதீ வ் உம்தத்தி
உறீது ஸலாமன் றஹ்மதன் மின்க உத்தத்தி
அஸில் பாக்த்தீ ஹாஸ்னீ வமர்லீ வ உக்தத்தி
கியன்னீ பி இத்தினில்லாஹி பீருமுஹம்மதி 16

(இ-ள்) என்னுடைய நாயகமானவர்களே, என்னை ரக்ஷித்து பாதுகாப்பாற்றக்கூடிய எனக்கு மிகவும் அவசியமானவர்களே தங்களிடத்தில் எனக்கு றகுமத்தையும் சலாமத்தையும் அல்லா குத்தூ ஆலாவில் நின்றும் தங்கீகம் செய்துவைத்திருக்கிறதாக எண்ணி நாங்கள் தங்களின் ஸமுகத்திற்கு வாலானேன். ஆகை யால் பீர்முஹம்மதென் றழைக்கப்பட்டவர்களே, என்னுடைய மிடுமையையும், சஞ்சலத்தையும், வியாதியையும், கொடுமையை யும் நீக்கிவைத்து அல்லாகுத் தாலாவுடைய உத்தாவைக்கொண்டு என்னைப்பாதுகாக்கும்படி துஆ செய்யுங்கள்,

இலாஹீ அனல் ஆஸீ துறூபீ கதீறத்துன்
வ ஸாலிஹா அஹ்மாலீ கலீலுன் அதீறத்துன்
இதா குந்த அபுவன் பீ யெதிம்மு தாதீறத்துன்
பி ஹார்மத்தி கௌதின்னுஸி பீருமுஹம்மதி 17

(இ-ள்) ஆண்டவனே, நான் மிகுதியாகிய பாவத்தையுடைய பாவியாயிருக்கிறேன். நான் செய்த சாலிஹான அமலாகிறது மிக குறைந்தும் தவருதலுள்ளதுமாக இருக்கிறது. ஆண்டவனே, என் னுடைய பாவங்களை நீ மன்னிப்பு செய்கிற விஷயத்தில் மேற் போர்வைபோற்றப்பட்ட என் அமலானது உயர்பதவியாக்கிறதற்கு மனிதர்களை வழிகாட்டி ரெக்ஷிக்கும்படியாகிய பீர்முஹம்மது ஒலி அவர்களின் கீர்த்தியைக்கொண்டு நிறப்பமாக்கிவிடு.

இலாஹீ கியன்னா அன் பலாயின் வ இல்லத்தின்
வ கஹ்தின் வ ஜாத்றிய்யின் வபாயின் வகுல்லத்தின்
வ தஹானின் வதாஊனின் வ பஃறின் வ தில்லத்தின்
பி ஹார்மதி கௌதின் மின்க பீருமுஹம்மதி 18

(இ-ள்) ஆண்டவனே, எங்களை பலா மூஸீபத்தென்னும் சங்கடத்தை விட்டும், பஞ்சம் நவதானிய விலை அதிகமாகிறதை விட்டும் வபா என்னும் காலரா வியாதியை விட்டும் வைசூரி

முதலிய வியாதிகளை விட்டும் பிற மதஸ்தர்கள் குறை சொல்வதை விட்டும், பிளேக் யென்னும் வியாதியை விட்டும் கேவல ஸ்திதி யாகிய மிடிமை தனத்தை விட்டும் உன்னுடைய வொலியாகிய பீர்முஹம்மது ஒலியுல்லா அவர்களின் மரியாதைக்காக எங்களைக் காப்பாற்று.

இலாஹீ அநில்ஹு றஹ்மத்தன் வஸலாமத்தன்
வ ஆபியத்தன் இல்மன் வ பஹ்மன் வஇஸ்மத்தன்
நமாஅன் லிஅற்ஸாக்கின் வ மாலின் வ நிகுமத்தன்
பி ஹுர்மத்தி கௌதில் அர்லி பீருமுகம்மதி 19

(இ-ள்) ஆண்டவனே பூலோகத்தின் கண்ணே மனிதர்களுக்கு கௌது நாயகமாகிய பீர்முஹம்மது ஒலியவர்களின் மரியாதைக்காக எங்களுக்கு உன்னுடைய றகுமத்தென்னும் கிருபைகடாக்ஷத்தையும் உன்னுடைய சலாமத்தென்னும் ஈடேற்றத்தையும் சரீரசுவாத்தியத்தையும், கல்புக்கு விளக்கத்தையும் அறிவையும் கார்மானத்தையும் எங்களுடைய இரணங்களுக்கும் எங்கள் முதல்களுக்கும் விருத்தியையும் பவுசு பாக்கியத்தையும் தந்தருள்வாயாக.

வ யாறப்பு யாஅல்லாஹூ பகுபிற் துநூபனு
வ லில் வாலிதீனல் ஹாலிறீன ஜூனூபனு
வ குர்றுயி ஹாதல்மத்ஹி வஸ்துற் உயுபனு
வ ஸூவ்வாறி கப்றில் கௌதி பீருமுஹம்மதி 20

(இ-ள்) எங்களை வளர்த்து ஊட்டி உரக்காட்டும்படியாகிய அல்லாவென்னும் நாமந்தங்கிய ஆண்டவனே நாங்கள் தெரிந்தும் தெரியாமலும் செய்த எங்கள் பாவங்களையும் எங்கள் மாதா பிதாக்களின் பாவங்களையும் இச்சபையில் வந்து ஹாலிறு இருக்கிற மூமீன் முஸ்லிம்களின் பாவங்களையும் இந்த மத்ஹூவென்னும் மௌலிதை ஓதுகிறவர்களின் பாவங்களையும் மன்னித்தருள்வாயாக, இன்னுமெங்கள் கௌதுநாயகம் பீர்முஹம்மது ஒலியுல்லா அவர்களின் கபுரைத் தெரிசிக்க வந்தவர்களுடைய அய்புகளையும் மறைத்தருள்புரிவராயாகவும்.

வ பலுலன் வ இஹ்ஸானுன் வ அபுவ்வுன் வ றஹ்மதுன்
மினல்லாஹி றில்வானுன் வ இஸ்ஸின் வ நிகுமதுன்
வ ரௌஹுன் வறைஹானுன் வபௌஸுன் நயீமத்துன்
அலா பாபி ரௌலில் கௌதி பீருமுஹம்மதி 21

(இ-ள்) பீர்முஹம்மது கௌது நாயகம் அவர்களின் ரௌலா ஷரிபு என்னும் திருச்சமுகமானது அல்லாஹுத்த ஆலாவில் நின்றும் வருகையையும் இஹ்ஸான் என்னும் உபகாரத்தையும் மன்னிப்பையும் றகுமத்தென்னும் கிருபையையும் பொருத்தையும் மரியாதையையும் பௌசுபாக்கியத்தையும் சுகண்டியையும் ரூஹத்தையும் றைஹானென்னும் பூஞ்செடிகளையும் அமைந்துள்ளதாக இருக்கின்றது.

வ அஸ்கா ஸலாத்தி வஸ்ஸலாமித் தஹிய்யத்தி
அலா அஹ்மதின் வல்ஆலி கைறில் பறிய்யத்தி
அன ஷைகு முஹையத்தீனி ராஜிற் றலிய்யத்தி
பி தஹ்லீபி மத்ஹில் கௌதி பீருமுஹம்மதி 22

(இ-ள்) நான் ஓதிய மகா பரிசுத்தமான சலவாத்தும் காணிக்யையாக நான் சொல்லிய ஸலாமும் சகல படைப்புகளுக்கு மேலாம்பரமாகிய நமது நாயகம் அஹமது முஸ்தபா றசூல் சல்லல்லாகு அலைகிவ சல்லம் அவர்களின்மீதும் அவர்களின் கிளையார்களின் மீதும் உண்டாவதாக ஷேகு முஹையதீன் என்று சொல்லப்பட்ட நானுகிறவன் பீருமுஹம்மது கௌது நாயகமவர்களின் மத்ஹு வென்னும் மௌலிதை கோர்வை செய்கிறது கொண்டு அல்லாஹுத்த ஆலாவுடைய பொருத்தை ஆதாவு வைத்தவனுக இருக்கிறேன். ஆமீன் ஆமீன் யாரப்பல் ஆலமீன்

தம்மத் மவுலூது ஷரிபு தமாம்.

## மவுலீத்ஷரிபு ஓதியபின்னர் அல்ஹம்து பாத்திஹா இக்லாசும் ஓதி கீழ்க்கண்ட துஆவை ஓதவும்.

---

அல்லாஹு ம்ம மர்ஸுக்னு இல்மத் தௌஹீதி.

ஆண்டவனே, தௌஹீதுடைய இல்மை யெங்களுக்கு தந் தருள்வாயாக.

வ அமலல் இஹ்லாஸ் வ ஹுஸ்நல் ஹாத்திமா.

இன்னங்கலப்பற்ற அமலென்னும் வணக்கத்தையும் ஒடுக் கத்தின் நற்பேறைம் தந்தருள்வாயாக.

அல்லாஹு ம்மஃபிர்லில்மூமினின வல்மூமீனத் வல்முஸ்லி மீன வல் முஸ்லிமாத் அல்அஹ்யாயி மின்ஹும் வல் அம்வாத் இன்னக்க முஜீபுத் தஅவாத் பிறஹ்மத்திக்க யாஅர்ஹமர் றாஹிமீன்

(இ-ள்) ஆண்டவனே நீயாகிறவன் நிச்சயமாக அடியார் களின் துஆக்களுக்கு ஜவாபு சொல்கிறவனுக இருப்பதாலும் இரக்கமுள்ளவர்களில் மகா இரக்கமுடையவனுக இருப்பதாலும் உன்னுடைய கிருபை கடாக்ஷத்தைக்கொண்டு மூமீன் முஸ்லீமாகிய ஆண் பெண்கள் உயிரோடிருப்பர்களின் பாவங்களையும் மரணமான வர்களின் பாவங்களையும் பிழைகளையும் பொருத்தருள்வாயாக.

அலா இன்ன அவ்லியா அல்லாஹி லாஹௌபுன் அலைஹிம் வலாஹும் யெஹ்ஸனூன்

(இ-ள்) மூமீனுனவர்களே அறிந்துகொள்ளுங்கள். ஆனால் அல்லாஹுத்த ஆலாவுடைய அவுலியாக்களுக்கு யாதொரு பயங் காமும் யாதொரு சலிப்பும் கிடையாது

அல்லாஹும்மஹ்ஸின் ஆக்கிபத்தனு பில் உமூறி குல்லிஹா.

(இ-ள்) ஆண்டவனே எங்களின் காரியங்கள் அடங்கலிலும் ஒடுக்கமாகிய முடிவை அழகாக்கிவைத்தருள்க.

வ அஜிற்று மின்கிஸ்பித்துன்யா அதாபில் வ ஆஹிரு.

(இ-ள்) ஆண்டவனே, இவ்வுலகமாகிய இம்மையில் கேவல ஸ்திதியாக இருப்பதை விட்டும் மறுமையிலுண்டான தெண்டனையைநீக்கியும் நீ எங்களைக் காப்பாற்றுவாயாக.

வ தவப்பனு முஸ்லிமீன வ அல்ஹிக்னு பிஸ்ஸாலிஹீன் பிறஹ்மத்திக்க யா அர்ஹமர் ருஹிமீன்.

(இ-ள்) கிருபையும் தயாளமுமுள்ளவர்களில் மகா தயாளமுள்ள ஆண்டவனே நாங்கள் மவுத்தாகும்பொழுது முஸ்லிமானவர்களாக மௌத்தாகும்படி செய்து உன்னுடைய ஸாலிஹான அடியார்களோடு எங்களைச்சேர்த்து வைத்தருள்வாயாக.

வஸல்லி அலன்னபிய்யி முஹம்மதின் வ அலா ஆலிஹி வஸஹ்பிஹி அஜ்மயீன்.

(இ-ள்) ஆண்டவனே, எங்கள் நபிகள் நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் மீதும் அவர்களினது கிளையார்களின் மீதும் அவர்களினது தோழர்கள் அனைவர்கள் மீதும் ஸலவாத்தென்னும் கருணைபுரிந்தருள்வாயாக.

ஆமீன்.

(இ-ள்) நாங்கள் தாழ்ந்துகேட்கும் துஆவை ஏற்றுக்கொள்வாயாக.

ஸுப்ஹான றப்பிக்க றப்பில் இஸ்ஸத்தி அம்மா யெஸிபூன்.

(இ-ள்) எனது ஹபீபாகிய நபியே மகா சிறப்பும் வலுப்பமுமுள்ள உம்முடைய நாயனுடைய விஷயத்தில் கட்டுரையாகச்சொல்வோரின் சொற்களை விட்டும் அவைகளைப் பரிசுத்தமாக்கிவைப்பாயாக.

வஸலாமுன் அலல் முர்ஸலீன்.

(இ-ள்) ஸலாமென்னும் ஈடேற்றமானது முர்ஸலான நபிமார்களின்மீது உண்டாவதாகவும்

வல்ஹம்து லில்லாஹி றப்பில் ஆலமீன்.

(இ-ள்) ஆலத்தார்களைப் படைத்து வளர்க்கும்படியாகிய ஆண்டவனுக்கே சகலவிதமான புகழும் தகுமானதாகஇருக்கும். ஆமீன் ஆமீன் யாரப்பில் ஆலமீன்.

தம்மத்து தமாம்.

# விளம்பரம்.

40

---

இதனால் சகல முஸ்லீம் சகோதரர்களுக்கும் தெரிவிப்பது யாதெனில், சுமார் மூன்னூறு வருடங்களுக்குமுன் மலையாள மண்டலத்தைச்சார்ந்த தற்கலையில் வாழ்ந்திருந்து அனேக அற்புதங்களைக்காட்டிய மெஞ்ஞான சொரூபராகிய ஹாமிலொலி ஹலரத் பீர்முஹம்மது !சாய்பு ஒலியல்லா அவர்கள் திருவாய் மலர்ந்தருளிச்செய்த மெஞ்ஞான அமிர்தகலையும், மிகுராசுவளமும் இதுவரை ஏட்டுப்பிரதியாய் வெளிவராதிருந்தன. அனேக பிரபுக்கள் கேட்டுக்கொண்டபடி அனேக ஆலிம் உலமாக்களிடம் பரிசோதித்து கையொப்பமிட்டு தெளிவான ஞான ஆராய்ச்சியில் தேர்ந்த வித்வான்களைக்கொண்டு எழுதி வெளியாக்கப்பட்டிருக்கின்றது. இந்த அருமையான ஞானக்கடல் போன்ற மேலாம்பரமான இன்னூலின் விஷயம் ஒரு முறை வாங்கி உற்றுணர்ந்து பார்க்கும் நண்பர்களுக்கே இம்மகிமைவிளங்கும்.முஸ்லீம்சகோதரர்களே, இன்னூல் முன்னூற்றிசில்வானம் வருடம் ஏட்டுப்பிரதியாகவே எம்மூன்னோர்கள் அமைத்து வைத்திருந்தனர். சிறியேன் இஸ்மாயில் அரபி சாய்பு ஒருங்குசேர்த்து ஒன்றும் பேதகம் செய்யாமல் தளையேனும் அடியேனு முற்றுமற்றவிடத்து வரிசைப்புள்ளியிட்டு முற்றுவித்து முன்னிருந்தவாறே யச்சிடுவித்தோம். ஆனால் இவற்றுள் விருத்தம், கலி வெண்பா, கண்ணிகள், கொச்சகம் முதலிய செய்யுட்கள் தளை பிறழ்ந்தும் சிலவிடத்து ஒருமை பன்மை கலந்தும் சிலவரிகள் கூடியுங்குறைந்தும், சில பொருடாது மயங்கியும் பலவாறு பேதமுற்றிருப்பினும் அவை எம்மால் வந்தனவல்லவென்றும் மன்னிக்க விரும்புகின்றேன். இன்னும் றகுமான் முனுசாத்து, மத்ஹு மௌலூத் ஷரிபு காரணச் சரித்திரம் பீர்முஹம்மது சாஹிபொலியுல்லா அவர்கள் பேரில் திருவிதாங்கூர் ஷேகுமுஹையதீன் ஆலீம்சாய்பு அவர்கள் அரபுத்தமிழிலியற்றியதை ;செந்தமிழில் மொழிப்பெயர்த்து அச்சிலிடப்பட்டு வெளித்தோன்றியது. ஆனதால், அரபி பைத்துல் ஓதுகிறவர்கள் அரபுத்தமிழ் தெரிந்தவர்களைக்கொண்டு பிழையன்னியில் திருத்தி தெளிவாய் ஓதவும். தமிழ் எழுத்துக்களில் அரபு ஹறுபுகள் உச்சரிப்பு வேறு விதம் தோன்றும் திருத்தி ஓதவும். இன்ஷா அல்லா அடுத்த பதிப்பில் பயித்து அரபித்தமிழிலும், காரணச் சரித்திரம் சுத்தத்தமிழிலும் அச்சிடப்படும்